உ

சிவமயம்.

# கைவல்ய நவநீத நூலில் துவாதச (12) கவி உரை ஆராய்ச்சி.



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

வேதாந்த மடம்,

திருப்பூவணம்.

**திருப் பூ வணம், ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றின. அச்சிடப்பட்டன.**

1 வேதாந்த பதார்த்த மஞ்ஞுஷா வசநம் 2 50
2 விசார சாகரம் வசநம் 2 25
3 கதா சரித் சாகரம், கதை வசநம் 2 25
4 ஹரிமீடே, ஹரிதத்வ முக்தாவலி பத உரை 0 75
5 வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம் 0 50
6 நைஷ்க்கர்மிய சித்தி வசநம் 0 50
7 வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம் 0 50
8 ஸ்வராஜ்ய சித்தி வசநம் 0 50
9 பகவத் கீதை 15வது அத்தியாயம், சம்ஸ்கிருதம், தமிழ் பத உரை, தமிழ் பாட்டு, தமிழ் உரை, மூர்க்க சதகம் சம்ஸ்கிருதம் தமிழ் பத உரை, நிர்க்குண அஷ்டோத்தா சத நாமாவளி, சம்ஸ்கிருதம் தமிழ், நாலு சேர்ந்தது 0 50
10 வேதாந்த பரிபாஷை வசநம் 0 44 [வசநம் 0 25
11 மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜ யோக பாஷ்யம்
12 ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம் வசநம் 0 25
13 வேதாந்த சஞ்ஞா வசநம் 0 13

உரை நூல்.

14 நாநா ஜீவ வாதக் கட்டளை, சத்தியார்த்தப் பிரகாசிகை உரை 2 00
15 சீதா சாரத் தாலாட்டு. லகு சந்திரிகை உரை 2 00
16 மேற்படி, நக்ஷத்திர விளக்க உரை 0 25
17 சசி வர்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை 2 00
18 மகா ராஜத் துறவு-மநப் பிரசாதிநி உரை 2 00
19 பக்தி (வைராககிய) சதகப் பத உரை பொழிப் புரை 1 50
20 மேற்படி உரை, உதாரணக் கவி, பக்தி ரச உரை 1 00
21 வைராக்கிய தீபம், பத உரை பொழிப்புரை 0 50
22 மேற்படி உரை, உதாரணக் கவி, சுடர் உரை 1 00
23 சீடாசாரம் பால போதிநி உரை 0 50
24 கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீபிகை உரை உதாரணக் கவி 233-க்கு, ஆதித்தன் உரை 2 50
25 சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி, பரிமள தீப உரை 1 50
26 திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி மணி மாலை, சிறு சுடர் உரை 0 75
27 திரிம் சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி, நுந்தா ஒளி உரை 0 25
28 சப்ததா சப்ததி: தோத்திர ரச மஞ்சரி கவி 70 நுந்தா ஒளி உரை 0 50
29 விம்சதி ஸ்தோத்திர ரசமஞ்சரி கவி 20 மேற்படி உரை 0 25
30 மந்திர உபதேசம் வசநம் 0 25
31 வட நாட்டில் அரித் துவாரக் கும்ப மேளாவும், தென் நாட்டில் சாதுக்கள் மேளாவும் வசநம். சாது சங்க நிறுவல் விழா வைபவம் 0 50 [வசநம் 0 13
32 மடங்களின் உத்பத்தியும், தற்போ துள்ள நிலைமையும்,
33 அதிஷ்டாநத்தில் இருப்பவர்கட்கும், அத்வைதிகட்கும், ஓர் அறிக்கை 0 25
34 ஒன்பது துறவியர் பாடிய அருட்பா மாலை கவி 280 1 00
35 திருக் களர், வீர சேகர ஞாந தேசிகர் சரிதம் வசநம் 1 00
36 காசிகாநந்த விஜயம் வசநம் 0 25
37 மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி கவி (62) 0 50
38 வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (9) சேர்ந்தது 3 00
39 வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் விவேக் சூடாமணி கவி 671, அஞ்ஞ வதைப் பரணி கவி 494, பஞ்ச தசி கவி 796 (3) சோர்ந்ததுகவி (1961) 3 00
40 கீதாத் திரயம், ஈசுவர கீதை கவி 338, பகவற் கீதை கவி 545, பிரஹ்ம கீதை கவி 547 மூன்று சேர்ந்தது (கவி 1430) 3 00
41 வாசிட்டம் கவி (2055) 2 25
42 வேதாந்த சூடாமணி சந்தோஷ தாயிநி உரை 5 00
43 கைவவ்ய நவநீதம் பத சார உரை 3 50
44 கைவல்ய நவ நீதம் கிருத பாந உரை 3 00
45 கைவல்ய நவநீத ஆராய்ச்சி 0 50
46 சதுர்த் தச வித்யாப் பிரகாசிகை 0 50
1 பிரஹ்ம கீதை கவி 547, 0 38
2 ஈசுவர கீதை கவி338, 0 25
3 பகவற் கீதை கவி 545, 1 25. 4 பஞ்ச தசி கவி 796 0 62
5 கைவல்ய நவநீதம் கவி 288 0 56
6 பக்தி சதக தோத்திரம்-தோத்திரப் பிரகாச உரை 0 19
7 திரு எம் பாவை-திருப் பள்ளி எழுச்சி பத உரை 0 25
8 சூட்டுக் கோல், கட்டாரி, புச்சம், கண்டநம். வசநம் 1 00

---

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 16 | கிலிஞ்சில் | கிளிஞ்சில் |
| 9 | 23 | அறிபடாய் | அறிபடாப் |
| 11 | I8 | போலும | போலும் |
| 13 | 8 | காமங்கள் | கர்மங்கள் |

## அச்சு ஆக வேண்டியன.

1 யுக்திப் பிரகாசம் வசநம் ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2 பேத திக்காரம் மூலம், சத் கிரியை உரை வசநம்.

## சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

3 சித்தாந்த வேச சார சங்கிரகம் வசநம்.
56 மத விசாரம் மேற்படி
4 தர்க்க சங்கிரகம் - தீபிகை வசநம் தர்க்கம் ஷை
5 சப்த பதார்த்தி வசநம் தர்க்கம் ஷை
6 காணாத சித்தாந்த சந்திரிகை வசநம் தர்க்கம் ஷை
7 லௌகீக நியாய சங்கிரகம் வசநம் ஷை
8 சிவ சங்கராவதாரம் சுலோகம் உரை வசநம்.
9 ஸ்திரி புருஷ ஜநந மரண ரஹஸ்யம் வசநம்
10 மஹாத்ம சரிதாமிர்தம் வசநம் 80 பெயர் சரிதம்.
11 கோவிலூர் மடத்தின் அத்புத மஹிமா அகூபாரம் வசநம்.
12 கட்கம் கொண்ட காளியைச் செயிக்கும் காமாரி வசநம்
(சோமசுந்தர மாலைக்குக் கண்டநம்)
13 தாயும், தநயனும் வசநம் வேதாந்தம்
14 உண்மைக் கடவுள் வசநம்
15 பல கேள்வி சமாதாந லட்டர்கள் வசநம்.
16 கணேச கவசம், பத உரை
17 மேற்படி, தமிழ்க் கவி உரை
18 பட்டிநத்தார் பாடல் உரை
19 சந்யாச விதி, 20 சமாதி விதி
21 திரி புர சுந்தரி அஷ்டகம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு
22 வேத சார சிவ ஸ்தோத்திரம் மேற்படி
23 லகு வாக்கிய விருத்தி ஷை
24 சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்திரம் ஷை
25 கணேச பஞ்ச ரத்நம் ஷை
26 பிரபோத சுதாகரம் ஷை
27 விவேக சூடாமணி ஷை

8-4

நல் நிலம்

ஸ்ரீ தாண்டவ ராய சுவாமிகள் இயற்றிய

# கைவல்ய நவநீத நூலில் துவாதச (12) கவி உரை ஆராய்ச்சி.




இது,

திருப் பூ வணம்,

வேதாந்த, மடாதிபதி, சத சாஸ்திர கர்த்தா,

ஸ்ரீ காசிகா நந்த ஞா நாச்சார்ய ஸ்வாமிகளால்,

எழுதப் பெற்று,

மதுரை,

V. சுப்புராயலு நாயுடு பிரசில்,

பதிப்பிக்கப்பட்டது.

விலை] 1967 [பைசா 50 ஐம்பது

Acc. 12174

1 திருக்களர் உறையும் வலம்புரிக் களிற்றைத்
திருமிகு சண்முகன் அடியைப்,
பெருக்கமாம் அமிர்த வல்லியின் அடியைப்
பெரும்பாரி ஜாதவ நேசன்
விருப்புறும் அடியை வீரசே கரன்நல்
விளங்குதா மரையிணை அடியை,
உருக்கமாய் மநதில் உன்னியே பணிந்து
உரையின்ஆ ராய்ச்சியை செய்தேன்.

2 நல்நிலம் தன்னில் வந்த
தாண்டவ ராஜன் என்போன்,
சொல்நயக் கைவல்ய நவநீத
நூலின்பா முந்நூற் றுக்குப்,
பன்ரெண்டு குறைவாய்ச் செய்தான்
பன்னிரண்டு உரையின் ஆய்வு,
நல்நயக் காசி காநந்த
ஞாநவான் செய்தான் மாதோ.

---

### கைவல்ய நவநீத உரை இயற்றினர்.

1 கோவிலூர் மடம், துறவு அருணாசல ஞாந தேசிகர்.
2 பிறை ஆறு, அருணாசல சுவாமிகள்.
3 ஈசூர், சச்சிதாநந்த சுவாமிகள்.
4 சிதம்பரம், கோ. சித. மடம், பொன்னம்பல சுவாமிகள்.
5 தஞ்சா வூர், வெங்கடாசல சுவாமிகள்.
6 மதுரை, P. L. சாமிநாத பிள்ளை.

8-4



7 காளையார் கோவில், செல்லப்ப சுவாமிகள்.
8 திரு மா நிலையம், கோவிந்தய்யர்.
9 சென்னை, கோ. வடிவேல் செட்டியார்.
10 உடையார் பாளையம், ஆறு முக சுவாமிகள்.
11 குடியாத்தம், செங்கல்வ ராய முதலியார்.
12 சென்னை, லோக நாத முதலியார்.
13 திருப் பூ வணம், காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள், கிருத பாந உரை.

### கைவல்ய நவநீத நூலின் உரை
### ஆராய்ச்சி கவி 12,

1. தத்துவ விளக்கப் படலம் கவி 5.

20. ஆரோபம் அத்தியாசம்.
42, தானிகர் தனக்காம்.
45. சகமதில் இதுஎன்
67 அறிவுக்கும் அறிவு
101 கானல்நீர் கிலிஞ்சில் வெள்ளி.

2 வது சந்தேகம் தெளிதல் படலம் கவி 7.

9. தன்பதி அல்லாப் பேர்கள்.
65 பத்தி யும்வை ராக்கிய
74 (போகம் ஆருயிர்)
75 கள்ளும் ஊனும்நீ
78 சொரூப ஞாநமும்
79 துருத்தி மாயையைச்
151 தத்துவத்தில் மநம் உறைத்து
160 பாவிமந்த விராகத்தில்.

## பூமிகை.

நல் நிலம் தாண்டவ ராய சுவாமிகள் கைவல்ய நவநீதம் என ஒரு நூல் 288 கவியில் செய்தார்கள்.

அதற்கு, பன் னிரு பேர் உரை யியற்றினுர்கள். அப் பன் னிரண்டு உரையிலும், பன் னிரண்டு கவிக்கு, மூலக் கவியின் உண்மைப் பொருளை யாவரும உணர விளக்கா மையினுல், அப் பன் னிரண்டு கவி (துவாதசத்து)க்கு மட்டும் ஆய்வு எழுதி இருக்கின்ருேம். 2வது சந்தேகம் தெளிதல் படலம் 74வது கவியின் உரையை, யாருமே எழுதவில்லை. இது பூர்வ மீமாம்சா விஷயம். யாம் பூர்வ மீமாம்சா நூலில் இருந்தே எடுத்து எழுதி யிருக்கின்ருேம்.

சிவ உபாசனை, விஷ்ணு உபாசனை, அருப உபாசனையில் இருந்து, உருவ உபாசனையில் வந்த விவரம் எழுதி யிருக்கின்ருேம். பூர்வ மீமாம்சா விஷயமும், உருவ உபாசனா விஷயமும், விரிக்கில் நூல் விரியும் என அஞ்சி ஒரு சிறிது எழுதி னும்.

உரையின் பெயர் கிருத பாநம் என்ப தாம்; கிருதம்- நெய், பாநம் - குடித்தல், என்ப தாம். நெய் கொஞ்ச மாக இருந்தால், நாவால் நக்கி, (சவ்ட்டி) சாப்பிட லாம். கைவல்ய நவநீத ரூப கிருத பாந (நெய் குடித்தல்) உரை மிகுதி யாக இருத்தலின். பாத்திரத்தாலேயே பூராவும் குடித்து (அருந்தி) விட லாம். அதனுல்,இவ் உரைக்கு இப் பெயர் வைத் தாம்.

நெய்யைச், சாப்பாட்டில், மருந்துகளில், அநுபாந மாகச் சொற்ப மாகத் தான் உபயோகப்படுத்துவார்கள். விலை அதிகமும், ஒரு காரணம், ஆனுல், சைவல்ய நவநீதக் கிருத பாந உரை லோபம் இல்லாமல், விரி வாக அதிகாரிகளின் அறிவை விளக்கும்படி யாக எழுதி யிருப்பதால், சகாய விலை யாகி விட்டமையின், விரும்பிய அளவு கொள்ளும் வகை அறிந்து குடிக்கல் (பாநம் பண்ணல்) ஆம் என உணர்க.

*காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,*
திருப் பூ வணம்.



8-4

## 1 தத்துவ விளக்கப் படலம் கவி 20

ஆரோபம் அத்தியாசம் கற்பனை ஆவ எல்லாம்,
ஓர்ஓர்வத் துவினை வேறே
ஓர்ஓர்வத் துவென ஓர்தல்,
நார் ஒரு பணி ஆய்த் தோன்றல்
நரன் ஆகித் தறியும் தோன்றல்,
நீர்எனக் கானல் தோன்றல்
நிறம்தலம் வெளியில் தோன்றல், 20

(இ—ள்) ஆரோபம் -அத்தியாரோபம், அத்தியாசம்-அத்தியாசம், கற்பனை-கற்பனை என்று, ஆவ-கூறுவன, எல்லாம்- அனைத்தும், ஓர் ஓர்-ஒவ் வோர், வத்துவினை-வத்துவினிடத்தில். வேறே-விலக்ஷண மான, ஓர் ஓர்-ஒவ் வொரு, வத்து - வஸ்து, என - என்று, ஓர்தல் - அறிதல் ஆம். நார் - கயிற்றினிடத்தில், ஒரு - ஒப் பற்ற, பணி - பாம்பு, ஆய் தோன்றல் - ஆக (விவர்த்தம்) ஆகித் தோன்றுதலும், தறியும் - தறி (கட்டை) யினிடத்தில், நரன் - மநிதன் (கள்ள)ன், ஆகி - (விவர்த்தம்) ஆகி, தோன்றல் - பிரதிதியாதலும், கானல் - கானலில், நீர் - ஜலம், என - (விவர்த்தம்) ஆக, தோன்றல் -தோன்றுதலும், வெளியில்- ஆகாயத்தில், நிறம் - (கரு) நிறமும், தலம் - (கூடாரம் போல) இடமும், தோன்றல் -(விவர்த்த மாகத்) தோன்றுதலும் (திருஷ்டாந்தங்க ளாம்). எ—று.

வத்துவினை - வத்துவினிடத்து எனவும், தறியும் -தறியினிடத்து எனவும், கொள்க, நார்-கானல் - ஏழாம் வேற்றுமைத் தொகை எனக் கொள்க. அப்படிக் கன்றி, இரண்டாம் வேற்றுமை ஆகக் கொண்டால், பரிணும

வாத மாம். பிரஹ்மம் பரிணமித்தல் கூடாது. சாவயவத்துக்கே பரிணாமம் கூடும். நிரவயவ வத்துவிற்குப் பரிணாமம் கூடாது, பல பரிணாமம் அடைந்த பின் தேய்ந்து அழிவுறும். அது அறிஞர் கூற்று அன்று. பரிணாமம் விருத்தி ஆரம்பம் என்னும் மூன்று வாதமும், அதிஷ்டானப் பிரஹ்மத்தினை அழிக்கும் தன்மைத் தாம் விவர்த்த வாதம் ஒன்றுமே அதிஷ்டானப் பரிசம் இன்றிய தாம். மாயையின்கண் பரிணாமம் விருத்தி ஆரம்பம் கூடும், பிரஹ்ம சேதநத்தின்கண். பரிணாமம் விருத்தி ஆரம்பமாக ஜகத்தின் உத்பத்தி ஸ்திதி லயங்கள் கூடா தாம், சோபாதிகப் பிரஹ்மத்தினிடத்தில் பொருந்தும், நிருபாதிக சுத்தப் பிரஹ்மத்தின் இடத்தில் எவ்வாற்றும் பொருத்தம் இன் ரும் என உணர்க, 20

1 தத்துவ விளக்கப் படலம் கவி 42

[மூடல் என்னும் ஆவரண சத்தியின் தன்மையைக் கூறல்]

தான்நிகர் தனக்காம் ஈசன்
தனையுந்தங் களைத்தாம் கண்ட,
ஞாநிகள் தமையும் அன்றி
நாஸ்திந பாதி என்னும்,
ஊனிடை உயிர்கள் உள்ளத்து
உணர்விழி குருடாம் வண்ணம்,
வான்நிலம் திசைகள் மூடும்
மழைநிசி இருள்போல் மூடும், 42

(இ—ள்) தனக்கு - தனக்கு, தான்-தானே, நிகர் - சமானம், ஆம் - ஆகின்ற, ஈசன் தனையும் - ஈசுவரனையும், தங்களை - தங்களுடைய அதிஷ்டான சொரூபத்தை, தாம்-



தம்முடைய சொரூப மாக, கண்ட - (குரு உபதேசித்த தத்வமசி மகா வாக்கிய விசாரணை வாயிலாக) அப்பிரதிபந்த அபரோக்ஷ மாக) அறிந்த, ஞாநிகள் தமையும் - பிரஹ்ம வேத்தாக்களையும், அன்றி - (மறையாது) விடுத்து, ஊன்இடை-மூன்று சரீரத்தோடு கூடி உள்ள, உயிர்கள் - ஜீவர்களின், உள்ளத்து-அந்தக் கரணத்தில் உள்ள, உணர்-ஆத்ம ஞாந, விழி - நேத்திரம், குருடு ஆம் வண்ணம் - மறையும்படி, மழை - மழைக் காலத்து, நிசி - இரவில், இருள் - இருளானது, வான் - ஆகாயமும், நிலம்-பூமியும், திசைகள் - திக்குகளும், போல் — (ஆகிய பதார்த்தங்களைத் தெரியவொட்டாமல் ஊனக் கண்ணுக்கு மூடும் - மறைப்பது போல, நாஸ்தி - (ஆத்மா) இல்லை, நபாதி - விளங்கவில்லை, என்னும் - ஆகிய, மூடும் - (அசதது வ ஆபாதக ரூப, அபான ஆபாதக ரூப மாக) மறைக்கும்: எ—று.

'ஈசன்' தனையும், என்பதில், தன் அசை.

ஞாநிகள் தமையும் என்பதில் தம் அசை என்னும் என்பதில் உம் அசை. ந. இல்லை, அஸ்தி, இருப்பு. ந. இல்லை - பாதி - விளங்கல், நாஸ்தி — இருப்பது இல்லை- ந பாதி - விளங்க இல்லை. 42

1 தத்துவ விளக்கப் படலம் கவி 45

(ஆவரண சக்தி சாமாந்ய அம்சத்தை மறைக்காது விசேஷ அம்சத்தை மறைக்கு மெனக் கூறல்.)

சகமதில் இதுஎன் சுட்டாம்
சமானம்தான் மறைந்தி டாது,
மிகஇது கயிறும் என்னும்
விசேடந்தான் மறைந்து போகும்,

அகம்எனும் சமாநம் தன்னை
அஞ்ஞாநம் மறைத்தி டாது.
பகர்விசே டமதாம் சீவன்
பரம்எனும் அதனை மூடும்.

(இ—ள்) சகமதில் - உலகத்தில். இது - இது, என் - என்னும், சுட்டு ஆம்-சுட்டுத லாகிய, சமாநம் - சாமாந்ய அம்சம், மறைந்திடாது-மறையமாட்டாது, மிக-மிகவும், இது-இது, கயிறு ஆம்-பழுதை ஆம், என்னும்-என்கின்ற, விசேடம் - விசேஷ அம்ச மானது, மறைந்து - தோன்றாது, போகும் - போம், அஞ்ஞாநம் - அஞ்ஞாந மானது, அகம்-நான், எனும்-என்கின்ற, சமாநம் தன்னை - சாமாந்ய அம்சத்தை, மறைத்திடாது - மறைக்கமாட்டாது, பகர்-சொல்லாநின்ற, விசேடமது ஆம் - விசேடமது ஆகிய, சீவன் ; சீவனுக்கு, பரம் எனும் - பிரஹ்ம மாகிய, அதனை-அந்த கூடஸ்த வஸ்துவை, மூடும் (தெரியாது) மறைக்கும். எ—று;

'சகமதில்' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. தான் அசை. தான் அசை. 'சமாநம் தன்னை' என்பதில், தன் அசை. 'விசேடமது' என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி.

இந் நூலைச் சம்ஸ்கிருதத்தில் சுலோக மாக மொழி பெயர்த்த சங்கு கவி என்பவர், 42 கவி "தானிகர் தனக்காம் ஈசன் தனையும் தங்களைத் தாம் கண்ட ஞாநிகள் தமையும் அன்றி" என்ற செய்யுளில், ஈசுவரனையும், ஞாநிகளையும், அஞ்ஞாநம் மறைக்காது, ஏனைய ஜீவர்களை மறைக்கும் என்று மொழி பெயர்த்தார். இக் கவியை



மொழி பெயர்த்த போது, "விசேட மதாம் சீவன் பரமெனுமதனை மூடும், என்ற வாக்கியத்தை, "ஈசுவர ஜீவ போதத்தை மறைக்கும்" என மொழி பெயர்த்தனர், இதனால், பாஷா ஞாநம் உடையவரே அன்றி, வேதாந்த சாஸ்திர சம்பரதாய ஞாநம் உடையவர் அன்று என்று தெரிகின்றது. ஈசுரன் சர்வஞ்ஞன், அவனை மாயை மறைக்காது. மாயையை வசம் செய்திருப்பவன் ஆதலின் தமிழில் உரை எழுதின ஒருவரும். ஈசுவர ஞாநத்தை மாயை மறைக்கும் என எழுதியிருக்கின்றனர். அது சாஸ்திர சம்பிரதாய விரோத மாம். யுக்த யோகிக்கும் யுஞ்ஜாந யோகிக்கும், வித்தியாசம் உண்டு. ஈசுவரனுக்கும் மறைப்புண்டும் ஆயின், சர்வஞ்ஞத் தன்மை என்பது யாது? "தானிகர் தனக்காம் ஈசன் தனையும் தங்களைத்தான் கண்ட ஞாநிகள் தமையும் அன்றி" என்ற 42வது செய்யுளை மறந்தனர் போலும். விரிக்கில் பெருகும். 45

## தத்துவ விளக்கப்படலம் 67 கவி

(நியாய வைசேஷிகர் கொள்கை தவறும் என்று கூறுகின்றார்)

அறிவிக்கும் அறிவு செய்யும்
அறிவுவே றுண்டென் றெண்ணும்,
அறிவற்ற குதர்க்க மூடர்க்
கநவஸ்தை பலம்ஆய்த் தீரும்,
அறிபடும் பொருள்நீ அல்லை
அறிபடாய் பொருள்நீ அல்லை,
அறிபொருள் ஆகும் உன்னை
அநுபவித் தறிவாய் நீயே. 67

(இ—ள்) அறிவுக்கும் - (கடாதி) ஞாநத்திற்கும், அறிவு - (பிரகாச ரூப மான) அறிவை, செய்யும் - தரும், அறிவு வேறு - பிரகாசாந்தரம், உண்டு - உண்டு, என்று - என்று, எண்ணும் - கருதாநிற்கும், அறிவு - (ஆந்மா சொப்பிரகாசம் என்னும்) ஞாநம, அற்ற - இல்லாத, குதர்க்க மூடர்க்கு - அவிவேகம் மூல மான பிரலாபத்தினை உடைய நியாய வைசேஷிகர்க்கு, அநவஸ்தை - அநவஸ்தா தோஷம், பல மாய் - பிரயோஜந மாய், தீரும - முடியும், [அற்றேல், ஆந்மா அஞ்ஞாத வஸ்து என்று ஆமோ எனில், கூறுகின்ருர்]. அறிபடும் - ஞாத - பொருள்-வஸ்து ஆக, நீ-நீ எப்படி, அல்லை - அல்லையோ அப்படி, அறிபடா- அஞ்ஞாத, பொருள் - வஸ்துவும், நீ - நீ, அல்லை - அல்லை, [பின்னை நான் எத் தன்மையன் எனில் கூறுகின்ருர்] அறி- (ஞாத அஞ்ஞாத மாகிய சகலப் பிரபஞ்சத்தினையும் பிரகா சாந்தர அபேக்ஷை இன்றி, அறிகின்ற அநுபவ-ரூப மான) சொப்பிரகாச, பொருள் - வஸ்துலே. ஆகும் - (நீ) ஆம், [இத் தன்மையன் ஆன என்னை யான் எப்படி அறிவது எனின், கூறுகின்ருர்.] உன்னை - (சொப்பிரகாச சொரு பன் ஆன) உன்னை, அநுபவித்து - (பிரமாண தர்க்கங்களை விட்டு கர்த்திருத்வ சுபாவம் கழன்ற) அநுபவத்து இருந்து, நீயே - நீயே, அறிவாய் - சாக்ஷாத்கரிப்பாய். எ—று,

இச் செய்யுள், "குதர்க்க மூடா" என்று பிராசீந நவீந தார்க்கிகர்களைக் கூறினும், சைவர்களுள், பேத வாத சைவர்கள் ஆகிய ஒரு சாரார் கண்டநமு மாகும-

அநவஸ்தை - அவஸ்தை - முடிவு, அஃதில்லாதது - அநவஸ்தை முடிவு அற்றது என்பது பொருளாம். 67



தத்துவ விளக்கப் படலம் கவி 101

(ஒன்பது திருஷ்டாந்தத்தோடு சத்யம் செய்து கூறுகின்ருர்)

KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 12174

கானல்நீர் கிளிஞ்சில் வெள்ளி
கந்தர்ப்ப நகர்க நாவூர்,
வாநமை கயிற்றில் பாம்பு
மலடிசேய் முயுலின் கோடு,
பீநம்ஆம் தறிபு மானில்
பிரபஞ்சம் எல்லாம் பொய்யே,
ஞாநமெய் மகனே உன்னை
நம்ஆணை மறந் திடாதே- 101

(இ—ள்) கானல் - கானலில், நீர்-ஜலம் (போலும்), கிளிஞ்சில் - சுக்தியில், வெள்ளி - ரஜதம் (போலும்), கந்தர்ப்ப-கந்தர்வ, நகர் - நகரம் (போலும்), கநா - சொப் பந, ஊர் - நகரம் (போலும்), வாநம் - ஆகாயத்தில் -மை- நீல நிறம் (போலும்), கயிற்றில் - ரஜ்ஜுவில், பாம்பு - சர்ப்பம் (போலும்) மலடி - வந்தியா, சேய் - புத்திரன் (போலும்). முயல் - சச, கோடு - விசாணம் (போலும்) பீந மாம் - பருமை ஆன, தறி - தாணுவில், புமானில் - புருஷன் போலும், பிரபஞ்சம் - (அகங்கார ஆதி) பிரபஞ் சம், எல்லாம் - அனைத்தும், பொய் - மித்தை, ஞாநம் ஏ - பிரஞ்ஞாந கநப் பிரஹ்மமே. மெய் - சத்தியம், மகனே - மைந்தா, உன்னை-(இத் தன்மை யான உனது ஆத்மாவை, நம்-நம் மேல், ஆணை - ஆணை, மறந்திடாதே (நீ) மற வாதே. எ—று

ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது, இன் சாரியை. ஏ. ஏ. அசை. பிரபஞ்சம் மித்தை என்பதற்கு, ஒன்பது

திருஷ்டாந்தங்கள் கூறப்பட்டிருக்கிறதை ஆழ்ந்து நோக்குக.

1. மலடி செய், 2. முயல் கோடு, இரண்டும் சப்த ஐத்துவமே உளது என்றும், 1. கானல் நீர், 2. கிளிஞ்சில் வெள்ளி, 3. கந்தர்ப்ப நகர், 4 கநா ஊர், 5 வானம் மை, 6. கயிற்றில் பாம்பு, 7. தறி புமான், ஏழும் பிராதிபாஸிக அர்த்தக் கிரியாகாரித்வம் உளது என்றும், திருட்டாந்தத்தினைப் பகுத்துணர்க.

பிரபஞ்சம் விண் மலர் போலத் துச்சமும் இல்லை, உயிர் போல் நித்தமும் இல்லை, பாத யோக்கிய சொரூபம் உடைய அநிர்வசநீய மாம் என உணர்க. 101

2வது சநதேகம் தெளிதல் படலம் 65 கவி

[சகலத்தினையும் பயக்க வல்ல சத் கருமங்கள், அஞ்ஞானத்தினை நிவிர்த்தித்தல் லே சாகலின், விசாரம் ஏன் என வினவுதல்.]

பக்தி யும்வை ராக்கிய மும்பர
லோகமும் அணிமாதி,
சித்தி யும்தவ நிட்டையும் யோகமும்
தியாநமும் சாரூப,
முத்தி யும்தரும் விசித்திர கருமங்கள்
மோகம்மாத் திரம்தள்ளும்,
புத்தி தந்திடல் அருமையோ விசாரம்ஏன்
புண்ணிய குருமூர்த்தி.

(இ—ள்) பத்தியும் - (ஈசுவரன் இடத்து) அன்பும், வைராக்கியமும் - (சகலத்திலும்) நிரா



சையும், பரலோகமும் - சுவர்க்கலோகமும், அணிமா - அணிமா, ஆதி சித்தியும் - முதலிய அஷ்ட சித்திகளும், தவ - தவத்தில், நிட்டையும்-உறுதியாக நிற்றலும், யோகமும் - (இயமாதி அஷ்டாங்க,) யோகமும், தியாநமும் - (சகுண நிர்க்குணத்) தியாநமும், சாரூப முத்தியும் - சாரூப மோக்ஷமும், தரும் - (ஆகிய இவற்றை) கொடுக்கும், விசித்திர - ஆச்சரிய மான, கருமங்கள் - (சத்) காமங்கள், மோகம் - (தன்னைப் பிரம மாக அறியாத) அறியாமை, மாத்திரம் - மாத்திரத்தினை, தள்ளும் - நிவிர்த்திப்பிக்கும். புத்தி - ஞானத்தினை, தந்திடல் - தருதல், அருமையா - அருமையா, விசாரம் - விசாரம், ஏன் - யாதுக்கு, புண்ணிய - புண்ணிய ரூப மான, குரு - குரு, மூர்த்தியே - மூர்த்தியே. எ—று.

1. பக்தியும், 2. வைராக்கியமும், 3. பரலோகமும், 4. சித்தியும், 5. தவ நிஷ்டையும், 6 யோகமும், 7. தியாநமும், 8. சாரூப முக்தியும் என அஷ்ட வித பலன் கர்மங்கட்கு கூறியிருப்பது உணரற்பாலது. 65

2வது சந்தேகம் தெளிதற் படலம் கவி 74

[இயற்கையை வேதம் விதியாது எனச் சங்கை]

போகம் ஆருயிர் கண்டதை உண்பதும்
புணர்வதும் இயல்பே காண்,
ஆக மங்களும் சுபாவத்தை விதிக்குமோ
அத்தனை தெரியாதோ,
காக மேகறுத் திடுநெருப் பேசுடு
கசந்திடு வேம்பேநீ,
வேக வாயுவே அசைஎன ஒருவரும்
விதித்திடல் வேண்டாவே. 74

KOVILOOR VEDANTA MUTT

(இ—ள்) போகம்(சுக துக்காதி) போகங்களை, ஆர் - பொருந்தி அநுபவிக்கின்ற, உயிர் - சீவர்கள், கண்டதை- எதிர்ப்பட்ட பதார்த்தங்களை, உண்பதும் - புசிப்பதும், புணர்வதும்-(எதிர்ப்பட்ட பெண்களைக்) கலவி செய்வதும், இயல்பே - இயற்கையே ஆகும், ஆகமங்களும் - வேதங் களும், சுபாவத்தை - இயற்கையை, விதிக்குமோ - விதி செய்யுமா, (அபூர்வம் முதலியவற்றை விதிக்குமே அன்றி யதிரிச்சா பிரவிர்த்தி யாகிய இயற்கையை விதிக்காது என்றபடி) அத்தனை-அவ் வளவு கூடவா, தெரியாதோ- (வேத மாதாவுக்குத்) தெரியாது, [இயற்கைக்கு விதி இன் றென்பதில், திருஷ்டாந்த வாயிலாக உணர்த்துகின்றார்.] காகமே - காக்கையே, கறுத்திடு - (நீ) கரிய நிறத்தோடு இருப்பாயாக, நெருப்பே - அக்கினியே, சுடு - (நீ பதார்த் தங்களை) தகிப்பாயாக, வேம்பே - வேப்ப மரமே, நீ - நீ, கசந்திடு - கைத்திடுவாயாக, வேக - வேக முடைய, வாயுவே - வாயுவே, அசை - (நீ) சலிப்பாயாக, என - என்று, ஒருவரும் - எவரும், விதித்திடல் - விதிப்பதற்கு, வேண்டா-வேண்டுவ தில்லை, எ—று. ஏ-ஈற் றசை. காண் முன் னிலை - அசை, 74

2வது சந்தேகம் தெளிதல் படலம் 75 கவி

[ஸ்வபாவப் பிரவிர்த்தியிலும், பரிசங்கியா விதி உண்டு எனச் சமாதானங் கூறுகின்றார்.]

கள்ளும் ஊனும்நீ விரும்பினால் மகங்கள்செய்
காமத்தின் மநதானால்,
கொள்ளும் பெண்பொடு கலவிசெய் எனில்இவன்
குறைஎலாம் தொடான்என்றே,



தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும்
தவிர்வதே கருத்தாகும்,
விள்ளும் இவ்விதி என்எனில் அபூர்வ
நியமமாம் விதி அன்றே- 75

(இ—ள்) நீ - நீ, கள்ளும் - மதுவும், ஊனும்-மாமி சமும், விரும்பினால் - (உண்ண) இச்சித்தால், மகங்கள் - (அசுவமேதம் முதலிய) யாகங்களைச், செய்-செய்து (அதன் சேஷத்தை நீ உண்பாயாக,) காமத்தில் -ஸ்திரீயின் புணர்ச் சியில், மநது - மநது, ஆனால் - இருந்தால், கொள்ளும் - (அக்நி சாக்ஷி யாக விவாகத்தால் மனைவி ஆக) வரித்த, பெண்பொடு - ஸ்திரீயுடன், கலவி - புணர்தலை, செய் - செய், எனின் - என்று (நாம்) விதிக்கின், இவன் -(நமது ஆஞ்ஞைக்கு அஞ்சி) இப் புருடன் ஆனவன், குறை எலாம் - ஒழிந்த யாவற்வறயும் (அதாவது நிரந்தரம் நேரிட்ட போகங்களையும், நேரிட்ட ஸ் தி ரீ க ளை யு ம்)- தொடான் - ஸ்பரிசியாமல், தள்ளும் - விட்டு விடுவன், என்றே - என்றே, வேதத்தின் - சுருதியின், சம்மதம் - சம்மதம் (ஆகும்), சகலமும் - (ஆகலின்) சகலத்தையும், தவிர்வதே - விட் டொழிவதே, கருத்து - (அதற்கு) அபிப் பிராயம், ஆகும் - ஆம், விள்ளும் - (ஆயின்,) மனை அறங் கள் செய், மகங்கள் செய் நன்று என்று) முன் விண்டு கூறிய, இவ் விதி - இவ் விதி யானது, என் - என்ன விதி, எனில் - என்று நீ சங்கிக்கில், அபூர்வ - அபூர்வ விதியும், நியம மாம் விதி - நியாமக விதியும், அன்று – அன் றாம், (பின் என் எனின், பரிசங்கியா விதி யாம்.) ஏ-அசை.

விதி, அபூர்வ விதி, நியாமக விதி, பரிபங்கியா விதி என மூ வகைத் தாம்.

(1) எதற்கு எதன் பொருட்டுத்தன்மை வேறு பிரமாணத்தினுல் அறியப்படவில்லையோ, அதற்கு, அதன் பொருட்டுத் தன்மை யாக, எந்த விதியோ, அது, அபூர்வ விதி யாம் "ஸ்வர்க்ககாம: ஜ்யோதிட் டோமேந யஜேத" (துறக்கம் விழைவோன் ஜ்யோதிஷ்ட் டோம யாகத்தால் வேட்க என்பது) அபூர்வ விதி யாம்.

(2) நியாமக விதி - ஒரு பக்ஷத்தில் அடையப்படாத அம்சத்தை பூர்த்தி செய்வது, நியாமக விதி யாம். ஈரிடத்துப் பிராப்த மாயின், ஒன்ருலேயே செய்ய வேண்டும் என்னும் நியமம். நியாமக விதி யாம். நெல்லை அரிசி ஆக்குவது, உரலில் போட்டு உலக்கையால் குத்தினுலும், பலர் கூடி நெகத்தினுல் உரித்தலினுலும், அரிசி ஆக்க லாம், அவ் விடத்து, "அவகாதேனைவ தண்டுலம் குர்யாத் (உரலில் குத்துதலினுலேயே அரிசி ஆக்குக) என்பது நியாமக விதி யாம்.

(3) பரிசங்கியா விதி - இரண்டு சமுச்சய அடைவில், ஏனையவற்றினை நிவிர்த்தித்தல் ரூப பலம் உடைய விதி, பரிசங்கியா விதி யாம். அக்கிநிசயநப் பிரகரணத்தில், "இந் தக் கயிற்றை பிடிக்க" என்பது. அசுவக் கயிற்றைக் கூறு கின்றது "இம் மந்திரம், அசுவக் கயிற்றைக் கவர்வதில் அங்கத் தன்மை யாக (மந்திரம்) விதிக்கின்றது. இந்த விதி இல்லாவிட்டால், கயிற்றைக் கவர்வதை விளக்கும் மந்தி ரம், கயிறைக் கவர்வதை விளக்கும் சாமர்த்திய ரூப லிங்கத்தினுல், குதிரைக் கயிறைக் கவர்வது போன்று, கழுதைக் கயிற்றைக் கவர்வதிலும் நியாமக அடைவு உண் டாம். இந்த விதி இருக்கு மாயின், இம் மந்திரத்தினுல், குதிரைக் கயிறையே கவர்கின்றது. கழுதைக் கயிறைக்



கவர்வ தில்லை அது, சும்மாவே கவரப்படுகின்றது. ஆகை யால், கழுதைக் கயிற்றில் மந்திர நிவிர்த்தி ஆகின்றது. இரண்டு சமுச்சயப் பிராப்தியில், ஏனையவற்றின் நிவிர்த்தி, பலம் உடைமையான், இது பரிசங்கியா விதி யாம். இது மீமாம்சா பரிபாஷை, மீமாம்சா நியாயப் பிரகாசம், அர்த்த சங்கிரகம் மூன்றிலும் உள்ளது. ஆம்.

அது போன்றே, கள்ளும், ஊனும், காம போகமும் கொள்க. கள் குடித்தல், சாதாரணம் ஆகவும் குடிக்க லாம். யாக சேஷத்தினையும் குடிக்க லாம். மாமிசம் புசித் தல், சாதாரண மாகவும் புசிக்க லாம். அசுவ மேதம்-கோ மேதம் - அஜா மேதம் முதலிய யாகம் செய்து- யாக சேஷத்தினை (மாமிசத்தினை)யும் புஜிக்கல் ஆம்.

காம போகம் - கண்ட பெண்களோடும் கலவி செய் யல் ஆம். கட்டிய மனைவியோடும் கலவி செய்ய லாம். மூன் றும் ஈர் இடத்தும் பிராப்த மாம்.

"யாகம் செய்து சேஷ மதுவைக் குடி" என்றும், "அஜா மேதம், கோ மேதம், அசுவ மேதம் முதலிய யாகம் செய்து, அதன் சேஷ மாமிசத்தைப் புசிப்பாய்" என்றும், "அக்நி சாக்ஷி யாகக் கட்டிய மனைவியோடு கலவி செய்" என்றும், இருந்தால், சாதாரண மாகக் கள்ளைக் குடித் தலும், சாதாரண மாக மாமிசம் புஜித்தலும், எதிர்ப்பட்ட பெண்களோடு கலவி செய்தலும், பிராப்தம் இன்மையி னுல், நீங்கிவிடும் என்பது ஆம். விதி முக மாகப், "பரிசங் கியா" விதி என்று கூருமல், நிஷேத முக மாக, "அபூர்வ நியம மாம் விதி அன்று" என்று கூறியது, "அபூர்வ விதி,

நியாமக விதி'' என்று சங்கிப்பாரை நோக்கி, லாகவத்தால், அபூர்வ விதியும், நியாமக விதியும் அன்று - பரிசங்கியா விதியே ஆம என்று திரப்படுத்தி அறிவுறுத்தற் காம். விதி முகத்தினைப் பார்க்கிலும், நிஷேத முகத்துக்கு ஆற்றல் அதிகம்.

ஏகம், அத்வைதம், என்று சுருதி, இரு வகை ஆகக் கூறுவது உணரற்பாற்று.

'விதி' முக வாக்கியத்தினைப் பார்க்கிலும், நிஷேத முக வாக்கியம் பிரபலம் உடையது'' என்று தார்க்கிகரும் கூறுவர்.

1. உத்பத்தி விதி, 2. விநியோக விதி, 3. பிரயோக விதி, 4, அதிகார விதிகளைக் கூறு வாம்.

1. உத்பத்தி விதி:— கர்ம சொருப மாத்திரத்தினைப் போதிக்கும் விதி, உத்பத்தி விதி யாம். ''அக்நி ஹோத்தரம் ஜுஹுயாத்'' என்னும், இந்த விதியில், கர்மத்திற்குக் கரணத் தன்மையோடு அந்வய மாம்.

2. விநியோக விதி, அங்கப் பிரதாந சம்பந்தத்தினைப் போதிக்கும் விதி, விநியோக விதி ஆம். எங்ஙனம் ''தத்நா ஜுஹோதி'' என்று. அது, மூன்றும் வேற்றுமையினால் அடைந்த அங்க பாவத்துக்கு, தயிருக்கு, ஹோம சம்பந்தம் விதிக்கின்றது. ''தயிரினால் ஹோமத்தினைப் பாவிக்குக'' என்று, இஃது ஆம்.

3. பிரயோக விதி, பிரயோக பிராகபாவத்தினைப் போதிக்கும் விதி, பிரயோக விதி ஆம். அதுவும், அங்க

FROM LIBRARY ...



வாக்கியத்தினோடு ஏக வாக்கியத் தன்மையினை அடைந் தமையின், பிரதாந விதியே ஆம். அங்கங்கட்கு கிரமத் தினைப் போதிக்கும் விதி, பிரயோக விதி என்பது லக்ஷண மாம்.

4. அதிகார விதி:- பல ஸ்வாம்யத்தினைப் போதிக் கும் விதி, அதிகார விதி ஆம். பல ஸ்வாம்யமும், கர்ம ஜந்ய பல போக்திருத் தன்மை ஆம். அதுவும், ''யஜேத ஸ்வர்க்க காம.'' என்னும் இவ் வாருயது. இதனால் ஸ்வர்க்கத்தினை உத்தேசித்து யாகத்தினை விதிக்கும் ஸ்வர்க்க காமனுக்கு, யாகத்தினால் உண்டான பலத்தினை அநுபவிக் கும் தன்மை பிரதிபாதிக்கப்படுகின்றது.

இவ் வாறு, பூர்வ மீமாம்சா நூல் ஆகிய, மீமாம்சா நியாயப் பிரகாசம், மீமாம்சா பரிபாஷை, அர்த்த சங்கிரஹம் முதலிய நூல்களில் கூறியிருக்கும் ஏழு வகை விதிகளை உணர்க. 75

[நிஷேத விதியை உணர்த்தி, கர்ம பலப் பிராப்தியில் துன்ப அநித்தியங்கள் உள வாகலின், ஆசைகளை விடுவா யாக எனக் கூறுகின்றார்.]

மதுஇறைச்சிகள் உண் என்ற சுருதியின்
மணந்துபார் எனல்பாராய்,
மிதுந இச்சையும் புத்திரோத் பத்தியால்
விருப் பென்ற விதிபாராய்,
இதையும் விட்டொழி யதிநயிட் டிகவங்சிக்
கிகழ்ச்சியற் றதும்பாராய்,
அதைய றிந்துகன் மங்களா சைகள்ஒழிந்
தாநந்தம் அடைவாயே. 76

KOVILOOR VEDANTA MUTT

(இ—ள்) மது இறைச்சிகள் - மதுவையும் இறைச்சிகளையும், உண் - புஜிப்பாயாக, என்ற - எனக் கூறிய, சுருதி - வேத மானது, பின் - பின்னர் ஓரிடத்து, மணந்து - (அதன்) கந்தத்தினை, பார் - முகருவாயாக, எனல் - என்று, கூறிய வாக்கியத்தினையும், பாராய் - பார்ப்பாயாக, மிதுவ - மைதுந - இச்சையும் - விருப்பமும், புத்திர உத்பத்தியால் - வம்ச விருத்தியின் இச்சையால், விரும்பு - ஆசைப்படுவாயாக, என்ற - எனக் கூறிய, விதி - (வேத) விதியையும், பாராய் - பார்ப்பாயாக. இதையும் - (யாகம் செய்வதையும், மணந்து பார்ப்பதையும், மனைவியுடன் கூடுவதையும், (புத்திர உத்பத்தியால் கூடுவதையும்,) விட்டு ஒழி - விட்டு விடுவாயாக; (என்ற வாக்கியத்தையும் பார்ப்பாயாக), யதி - சந்நியாசிக்கும், நைட்டிக வந்நிக்கு - நைஷ்டிகப் பிரமச்சாரிக்கும், இகழ்ச்சி அற்றதும் - இகழ்ச்சி இன்றி இருப்பதையும், பாராய் - (நீ) அறிவாயாக, அதை - நியாமக விதி, நிஷேத விதிகளை, அறிந்து - உணர்ந்து, கன்மங்கள் - (நித்திய நைமித்திக காமிய பிராயச்சித்தாதி) கன்மங்களிடத்து, ஆசைகள் - (வைத்துள்ள) இச்சைகளை, ஒழிந்து - விடுத்து. ஆநந்தம் - பிரஹ்மாநந்தத்தினை, அடைவாய் - (விசார ஜெந்ய ஞானத்தினால்) அடைவாயாக 76
எ—று. ஏ ஈற்றசை.

2வது சந்தேகம் தெளிதல படலம் 78 கவி

[சங்கைக்கு சமாதாநம் கூறுகின்றார்]

சொரூப ஞானமும் விருத்திஞா நமும்என்று
சோதிஞா நமும்இரண்டாம்,
சொரூப ஞானமே விருத்தியின் ஞானம்ஆய்த்
தோன்றும்வே றிலைமைந்தா,



சொரூப ஞானம்அஞ் ஞானசத் துருஅன்று
சுழுத்தியில் கண்டாயே,
சொரூப ஞானத்தின் மருவும் அஞ் ஞானத்தைச்
சுடும்விருத் தியின்ஞானம். 78

(இ—ள்) மைந்தா - மகனே, சோதி - பிரகாச மான, ஞானமும் - ஞான மானதும், சொரூப ஞானமும் - சொரூப ஞானம் எனவும், விருத்தி ஞானமும் - விருத்தி ஞானம் எனவும், இரண்டாம் - இரண்டு வகைத் தாம், [அவற்றிற்குத் பேதம் உண்டோ எனின்] சொரூப ஞானமே - சொரூப ஞானம் தானே, விருத்தியின் ஞான மாம் - விருத்தி ஞான மாக, தோன்றும் - உண்டாகும், வேறு - (ஆகலின்) பேதம் இலை - இல்லை, சொரூப ஞானம் - (ஆயினும் காஷ்டத்திருக்கும் சமாந்ய அக்கினி யானது, அந்தகாரத்துக்கு எப்படி விரோதி அன்றோ அப்படி) சொரூப ஞான மானது, அஞ்ஞான - அஞ்ஞானத்துக்கு, சத்துரு - விரோதி, அன்று - அன்று, (பின்னை எப்படி எனின்,) அதற்குச் சாதக மாம். [இதற்கு அநுபவங் கூறுகின்றார்] சுழுத்தியில் - சுழுத்தி அவஸ்தையில், கண்டாயே - (பிரகாச ஸ்வரூப மான ஆன்மாவின் கண்ணே அஞ்ஞானம் விளங்காநிற்பதை நீ) அநுபவித்து அறிந்தாய் அல்லவா? (ஆதலால் சொரூப ஞானம் அஞ்ஞானத்திற்கு விரோதி அன்றாம்.) [அஞ்ஞானத்திற்கு விரோதி மற்று யாது எனின்] சொரூப - சொரூப, ஞானத்தின் - ஞானத்தின் கண்ணே, மருவும் - (அதனைப் பாதக மாகப் பொருந்தாமல் சாதக மாகப்) பொருந்தி உள்ள, அஞ்ஞானத்தை - அஞ்ஞானத்தினை, விருத்தியின் - (அஹம் பிரஹ்மம என்று அந்தக் கரணத்தினின்றும் எழாநிற்கும்) விருத்தி, ஞானம் - ஞான மானது,

சுடும் - தகிக்கும், (ஆதலால் விருத்தி ஞானமே அஞ்ஞானத்துக்கு விரோதி என்று அறிதி) எ—று.

வேறு தவறு உரைகளை எல்லாம் கண்டிக்க. 78

2வது சந்தேகம் தெளிதல் படலம் 79 கவி

[அஞ்ஞானம் சொரூப ஞானத்தினுல் நிவிர்த்தியாகாமல், விருத்தி ஞானத்தினுல் நிவிர்த்தி ஆனதற்குத் திருஷ்டாந்தத்தினேடு கூறுகின்ருர்.]

துருத்தி மாயையைச் சுழுத்தியில் சுடாததன்
சொருபஞா னம்தானே,
விருத்தி ஞானமாய்ச் சுட்டதெப் படிஎனில்
வெயிலால் உலகெங்கும்,
பரித்த சூரியன் சூரிய காந்தத்தில்
பற்றிஅக் கினிஆகி,
எரித்த ஆறுபோல் சமாதியில் விருத்தியால்
எரிக்கும்என் றறிவாயே. 79

(இ—ள்) துருத்தி - துருத்தியைப் (போலும் சங்கோச விகாசங்களை உடைய), மாயையை - அவித்தையை, சுழுத்தியில் - சுழுத்தியின்கண் (விரோதி யாய்), சுடாத - தகிக்காமல், தன் சொரூப - (அதற்குச் சாதக மாகவே இருந்த) தனது சொரூப, ஞானம் தானே - ஞானமே, விருத்தி - விருத்தி, ஞானம் - ஞான ரூபம், ஆய் - ஆய், சுட்டது - தகித்தது, எப்படி-எவ் வாறு, எனின் - என்று (நீ) சங்கிக்கில், வெயிலால்-(தனது) கிரணத்தினுல், உலகு உலகு, எங்கும் - எங்கணும், பரித்த - (சாதக மாய் நின்று) காத்த, சூரியன் - சூரியன் ஆனவன், சூரிய - சூரிய, காந்தத்தில் - காந்தக் கல்லில், பற்றி - பொருந்தி, அக்கி - அக்



கினி, ஆகி – ரூப மாய்த் தோன்றி, எரித்த - சுட்ட, ஆறு - முறைமை, போல் - போல, சமாதியில் - சமாதியின்கண், விருத்தியால் - விருத்தி ரூப ஞானத்தினுல், எரிக்கும் - விரோதி யாய் நின்று அவ் அஞ்ஞானத்தினை) சுடும், என்று - என்று, அறிவாய் - (நீ) அறிவாய் ஆக, எ—று. தான் -ஏ- அசை.

முன் இதற்கு உரை செய்த ஓர் உரைகாரர், சுழுத்தியில் சொரூப ஞானம், அஞ்ஞானத்தினை எதிரிட்டுக் காண்டலின் விரோதி யாம் என்று பத உரை செய்திருக்கின்ருர்.

அந்தகாரத்துக்கு, விரோதிக ளான சூரியன், அல்லது, தீபம் இவை, அந்தகாரத்தினை எதிரிடுவது, எங்கேனும், யாரேனும், கண்ட துண்டா?

இங்ஙனம் உரைசெய்தோர், “துருத்திமாயையைச் சுழுத்தியிற் சுடாத தற்சொரூப ஞானந் தானே, விருத்தி ஞான மாய்ச் சுட்டதெப்படி” என்னும் (79) செய்யுளை உய்த்து உணராமல் பொருள் கூறினமையின், அவர் உரை ஸ்வ கபோல கற்பனை என்றே நிச்சயிக்கப்படுகிறது

ஸ்வ கபோல கற்பனை என்பது, பிரமாணம் இல்லாமலும், தம் மநத்தின்கண் இல்லாமலும் கூறுவது. 79

[அசம்சத்தி பதார்த்த அபாவனை துரியகா என்னும் மூன்று பூமிகளின் லக்ஷணம் கூறுகின்ருர்.]

தத்துவத்தில் மநம்உறைத்து மித்தைஎலாம்
மறத்தல்அசம் - சத்தி ஆகும்,
அத்துவிதா நந்தம்வரும் திரிபுடிபோம் பதார்த்தாபா
வனைய தாகும்,

வத்துநிலை இருந்தபடி இருந்தமௌன சுபாவம்
துரீயம் ஆகும்,
இத்துரிய பூமியைமுன் துரியாதி தப்பதம்என்
றதுவும் கேளாய். 151

(இ—ள்) தத்துவத்தில் - (முன் சொன்ன நான்கு பூமிகளின் அப்யாச வலியால்) நிரதிசய ஆநந்த நித்திய அபரோக்ஷ பிரஹ்மாத்ம பாவத்தில், மநம் - மநது, உறைத்து - அழுந்தி, மித்தை எலாம் - மித்தை யான அஞ்ஞாநம் அதன் க்ாரியங்கள் அனைத்தையும், மறத்தல் - நினையாதிருத்தலே அசம் சத்தி ஆகும் - அஜம் சத்தி என்னும் ஐந் தாம் பூமி யாம், அத்துவித ஆநந்தம் வரும் - (ஐந்து பூமிகளின் அப்பியாச வலியால்) அத்துவித மான ஆத்மாநந்தம் மேலிடும், திரி புடி போம் - (மேலிடவே பாஹ்ய ஆந்தரங்களாய் உள்ள) திரி புடி ரூப மான பதார்த்தங்கள் அபாவ மாம், அது - அதுவே. பதார்த்த அபாவனை ஆகும் - பதார்த்த அபாவனை (என்னும ஆறும் பூமி யாம்), வத்து நிலை-(ஆறு பூமிகளின் அப்யாசத்தினுல்) ஆத்ம சுபாவத்தில், இருந்த படி - இருந்தபடியே, இருந்த - இருக்கும், மௌந சுபாவம் - மோந நிஷ்டையே, துரிய மாகும் - துரியம் என்னும் ஏழாம் பூமி யாம், இத் துரிய பூமியை-இந்தத் துரீயம் என்னும் ஏ ழாம் பூமியையே, துரீய அதீதம் பதம் என்றதுவும் - (முன்னே 132 வது செய்யுளில்) துரியாதீதப் பதம் என்று கூறின வகையையும். கேளாய் - (இப்போது கூறுதும்) கேட்பாய்- எ—று.

1. சுப இச்சை, நல் விருப்பம், 2. விசாரணை - விசாரித்தல், 3. தநுமாநசி - மாநசி-மநம், தநு - சுருங்குதல், இம் மூன்றும், சாதந பூமி, அதாவது, அப்பாச பூமி,



4. சத்வ ஆபத்தி - சத்தை அடைதல், 5. அஜம் சக்தி - ஜம் சக்தி - உலகம் நன்கு தோற்றல், உலகத் தோற்றம் இன்றி இருத்தல், அஜம் சத்தி யாம், 6. பதார்த்த அபாவனை - பதார்த்தம் - வாசனை, அஃது இன்றி யிருத்தல், அதாவது ஆநந்தத்தில் லயித்த லாம், 7. துரியம் - சதுரீயம் நான்காவது, சுபாவ நிஷ்டத்வம், சொருப மாய் இருத்தல், இது நான்கும் சாத்திய பூமி, அதாவது, அநுபவ பூமி, இவ் வாறு பிரித்து, நான்கா வது என்றனர். மொத்தம் ஏழு பூமிகள் ஆம். சத்வ ஆபத்தி - பிரஹ்மவித்துவுக்கும், அஜம்சக்தி - பிரஹ்ம வித்வரனுக்கும், பதார்த்த அபாவனை - பிரஹ்ம வித் வரியானுக்கும், துரீயம் - பிரஹ்மவித் வரிஷ்டனுக்கு மாகும். இந் நால்வரும், சாத்திய சமாதி தார தம்மியம் உடையவர் என உணர்க. அந்தர் முக விருத்தி வித்தியாசம் தான் காரண மாகும். 151

## 2வது சந்தேகம் தெளிதற் படலம் கவி 160

[தீவிர தரத்தில், சந்யாச வேறுபாடுகளும்.
அவற்றின் லக்ஷணங்களும் கூறுகின்றூர்.]

பாவிமந்த விராகத்தில் சந்நியா சங்கள்ஒன்றும்
பலித்தி டாதே,
தீவிரத்தில் குடீசகமும் வெகூதகமும் என்றிரண்டு
திறங்கள் உண்டாம்,
தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமும்
சகங்கள் எங்கும்,
மேவிநடந் திடத்திடம்உள் ளவர்க்குவெகூ தகமும்என
விதித்தார் மேலோர். 160

(இ—ள்) பாவி - பாவியினது, மந்த விராகத்தில் - மந்த வைராக்கியத்தில், சந்நியாசங்கள் - (நால் வகைச்) சந்நியாசங்களுள் - ஒன்றும்-யாது ஒரு சந்நியாசமும், பலித்திடாது - சித்திக்கமாட்டாது, தீவிரத்தில் - தீவிர வைராக்கியத்தில், குடீசகமும் - குடீசகமும், வெகூதகமும் - வெகூதகமும், என்று - என்று, இரண்டு-(சொல்லும்) இரு வித, திறங்கள், சந்நியாசங்கள், உண்டாம் - உள ஆம். [இனி அவற்றின் லக்ஷணம் கூறுகின்றார்.] தாவி-தாவி, நடந்திட- யாத்திரை முதலியன செய்ய, திடம் - சக்தி, இலாதவர்க்கு - இல்லாதோருக்கு, குடீசகமும் - குடீசகமும், சகங்கள் - உலகங்களில், எங்கும் - எவ் விடத்தும், மேவி-தாவி, நடந்திட - யாத்திரை முதலியன செய்ய, திடம் - சக்தி, உள்ளவர்க்கு - உள்ளோருக்கு, வெகூதகமும் - பகூதகமும், என - (உரியது) என்று, மேலோர் - பெரியோர், விதித்தார் - விதித்தனர். ஏ—று ஏ - அசை.

குடிசகம் - குடீசையில் இருப்பது, (குடிசை எனத் தமிழில் மருவிற்று) பகூதகம் - பகு, அநேக - உதகம், ஜலம், தேச சஞ்சாரம் என்பது, லாக்ஷணிகப் பொருள் அம்சம் - அந்நப் பக்ஷி, அதனை வாகந மாக உடையவர் பிரஹ்மா, பிரஹ்ம லோகம் போய்ப் பிரஹ்ம ஞாநம் அடைவதால் - அம்சன் ஆம். பரம அம்சன் - மே லான அம்சத்தினை உடையவன்- அதாவது, இந்த லோகத்திலே, குருவை சர்வஞ்ரு ராக, வேத வேத்தா வாகக் கருதி, அடைந்து பிரஹ்ம உபதேசம் கேட்டு, பிரஹ்ம ஞாநி ஆதல், பரமஹம்சன் ஆவன். இதில் பத்து நாமாக்கள் உண்டு. 1. புரி, 2 பாரதி, 3. தீர்த்தம், 4. சரஸ்வதி, 5. கிரி, 6, பர்வதம், 7. வித்தை, 8. ஆரண்யம், 9. ஆசிரமம், 10. வநம், என்பன ஆம். இந் நான்கு சந்யாசப் பெயரும், இடத்தால் வந்த



தாகும். அதனை உடையோர் குடீசகர், பகூதகர், அம்சர், பரமஹம்சர் ஆவர்.

இவற்றின் விரிவை, ''திரை வர்ணீக சந்பாச காசாரம்'' என்னும் நூலிலும், சந்நியாச பத்ததியிலும், ஆத்ம புராணத்திலும். கண்டு உணர்க. 1. கர தல பிக்ஷை, 2. தரு தல வாசம், 3. மலைக் குகை வாசம், 4. கிராமம், ஒரு நாள், 5. நகரம் மூன்று நாள் எனவும், 1 தேச சஞ்சாரம், 2. வஸ்திர தாரி, 3. கௌபீந தாரி, 4. நிர்வாணி, 5 சிவ உபாசகன், 6. சக்தி உபாசகன், 7. விஷ்ணு உபாசகன். 8. தண்டி, 9. அதண்டி. 10. முண்டி, 11 அமுண்டி எனவும், 16 பேதம் இருக்கின்றன.

முன்னர் நிர்வாணி யான சந்நியாசிகளு டைய ஆண் குறியை, சிவ லிங்க மாகக் கருதி, ஆண்களும், பெண்களும், அபிஷேக ஆராதனை செய்து வந்தனர். பின்னர், அவ் வாருன சந்நியாசிகள் மநம், விகல்பம் அடையவே, அதை நிறுத்தி, பாஷாணம், வெள்ளி, தங்கம், தாமிரம், ஸ்படிகம் முதலியவற்றில், சிவன் ஆண் குறியைச் செய்து, பூஜித்து வருகின்றனர். அதே போன்று, நிர்வாணி ஸ்திரி சந்நியாசினியின் மரும ஸ்தாந மாகிய யோநியின் முக் கோண வடிவில், தேவி யாகக் கருதி, ஆண்களும், பெண்களும், அபிஷேக ஆராதனை செய்து வந்தனர். பின்னர், சந்யாசினிகளின் ஒழுக்கம் தவறவே, ஸ்படிகம், தாமிரம், வெள்ளி, தங்கம், திரி பலா முதலியவற்றில், மேரு பிரஸ்தம், கைலாசப் பிரஸ்தம், பூ பிரஸ்தம், ஊர்த்துவ ரேகை, அதோ ரேகை, முதலியன செய்து. பௌர்ணமி, சுக்ர வாரம் முதலிய நாட்களில் இனிப்பு, உழுந்து, அடை, பாயசம்,

சர்க்கரைப் பொங்கல், நைவேத்தியம் வைத்து, பூஜித்து, இஷ்ட சித்தியைப் பெறல் ஆயினர். இவற்றின் விரிவை, சிவ பூஜை, தேவி பூசை விதிக்கும் நூல்களில் கண்டு தெளிக. ஈண்டு பூசை வந்த காரணம் சுருங்கக் கூறினேம்.

சிவன் ஆண் குறியும், தேவியின் பெண் குறியும், பிரஜா உத்பத்தி ஸ்தாந மாகலின், அதனை, பிரதாந மாகப் பூஜித்து வந்தனர்

லௌகீக வியவகாரத்திலும், சிவன், சக்தி, என்ற வியவகாரத்தினை அநுஷ்டித்து வருகின்றனர்.

1. சாவியில் போடும் வளையத்தில், ரௌண்டு ஆக இருக்கும் வளையம், சிவ சொரூப வளையம் என்றும், முக் கோண மாய் இருக்கும் வளையம், தேவியின் சொரூப முக் கோண வளையம் என்றும் இருக்கிறது.

2. சிமிண்டால், இரும்பால், பித்தளைத் தகட்டால், தாமிரத் தகட்டால், செய்கிற தண்ணீர் வைக்கிற தொட்டி யிலும், ரௌண் டாக இருக்கும் தொட்டி, சிவ ஸ்வரூப தொட்டி என்றும், முக் கோண மாய் இருக்கும் தொட்டி, தேவியின் முக் கோண வடிவத் தொட்டி என்றும், இருக் கிறது.

3 இருமலுக்குச் சாப்பிடுகிற மாத்திரைகளிலும், ரௌண் டாக இருக்கிற பெப்ஸ் முதலிய மாத்திரைகள், சிவ ஸ்வரூபத்தினை அறிவிப்பதனால், சிவ ஸ்வரூப மாத் திரைகள் என்றும், முக் கோணமா யிருக்கிற விக்ஸ் முத லிய மாத்திரைகள், தேவியின் முக் கோண ஸ்வரூபத்தினை அறிவிப்பதால், தேவியின் முக் கோண ஸ்வரூப மாத்திரை என்றும், இருக்கிறது.



4. சைவ வைஷ்ணவ வீடுகளுக்கு வைக்கும் ஜந் நல்களில் கூட, நீண்ட கால மாக, நாமம் போன்று இருக் கும் ஜந்நலை, விஷ்ணு ரூப நாமச் சந்நல் என்றும், விபூதிப் பூச்சுப் போல், மூன்று கோடு உடைய தாய் இருக்கும் ஜந்நலைச், சிவ சொரூபப் பூச்சுச் சன்னல் என்றும், கூறி அநுஷ்டித்து வருகின்றனர்.

5. புடைக்கிற முரத்தில் (சொளகில்) கூட- ரௌண்டு முரம், சிவ சொரூப முரம் என்றும், முக் கோண முரம், தேவி சொரூப முரம் என்றும் நீண்ட கால வழக்கில் இருந்து வருகிறது.

6. விளக்கு - எண்ணை போட்டு, நெய் போட்டு, எரிக்கும் விளக்கிலும், சிவ வியவகாரம், சக்தி வியவகாரம், அநாதி கால மாக உலகம் பூராவும் நடந்து வருகிறது,

விளக்கு, கல், இரும்பு, பித்தளை, தாமிரம், வெள்ளி, தங்கங்களில் செய்யப்படுகிறது. விளக்கு, 1. கை விளக்கு, 2. குத்து விளக்கு, 3. சர விளக்கு, 4. திரு வாச்சி விளக்கு, என நான்கு விதம் உண்டு, சர விளக்கும், குத்து விளக்கு சிலதும், ரௌண் டாக இருக்கும், அதனை, சிவ சொரூப விளக்கு என்றும், குத்து விளக்கு சிலதும், கை விளக்கும், திரு வாச்சி விளக்கும், முக் கோணமா யிருத்தலின், தேவி யின் சொரூப முக் கோண விளக்கு என்றும், விளக்கு (தீபத்தில்)களில் கூட சிவ உபாசனை, தேவி உபாசனைச் சொரூபங்களை அறிவிக்கின்றனர் என உணர்க.

7. விருக்ஷ பத்திரத்திலும், சிவ வியவகாரம், சக்தி வியவகாரம் உண்டு என் றுணர்க, அரச மரத்தின் இலை யும், தாம்பூலம் என்ற வெற்றிலையும், முக் கோண வடிவா

யிருத்தலின், முக் கோண வடிவ தேவியின் சொருபம், என்றும், தாமரை இலை அல்லி இலை சீமைப் பூ அரசு இலை, ரௌண்டா யிருத்தலின், சிவ சொருபம் என்றும் கூறுகின்றனர்,

8. சாத (அந்ந)ங்களை, பதார்த்தங்களை, எடுத்துப் பரிமாரிக் கொள்ளும் கரண்டிகள், மரம், இரும்பு, பித்தளை, தாமிரம், அல்மோநியம், ஜர்மன் ஸில்வர், (வெள்ளி) எவர் ஸில்வர் (வெள்ளி), வெண் கலம், வெள்ளி, தங்கம் 10 பத்து லோகங்களில் செய்கின்றனர். விற்கின்றனர்.

அதில், ரௌண்டாக இருக்கிற கரண்டி, சிவ சொருபத்தினை அறிவிக்கும் ரௌண் கரண்டி என்றும், முக் கோண வடி வாய் இருக்கும் கரண்டி, தேவியின் சொருபத்தினை அறிவிக்கும், முக் கோணக் கரண்டி என்றும், கூறுகின்றனர்.

பொருள்களை விற்போர், வளையத்திலும், ரௌண்டுக்கும், முக் கோணத்திற்கும், தொட்டியில், ரௌண்டுக்கும், முக் கோணத்திற்கும், மாத்திரையிலும், ரௌண்டுக்கும், முக் கோணத்திற்கும், சங்கிலிலும், நாமச் சங்கிலுக்கும், பூச்சுச் சங்கிலுக்கும், முறத்தில், ரௌண்டு முறத்திற்கும், முக் கோண முறத்திற்கும், உள்ள அநுகூலப் பிரதிகூலங்களை எடுத்துக் கூறி விற்கின்றனர்.

ஆனதால், சைவ (சிவ) வைஷ்ணவ (விஷ்ணு) வியவகாரம், சிவ வியவகாரம், சக்தி வியவகாரம் யாவும், உபாசனையி லிருந்து, விக்கிரக வியவகாரத்தில் வந்து, உபயோகிக்கும் பதார்த்தங்கள் வரை வந்து, மறந்து போகாமல், எப் போதும் ஞாபகத்தில் இருக்கும்படி யாக விரிந்துவிட்டது என்பதனை உணர்க. 160



## முடிவுரை.

இந்தக் கைவல்ய நவ நீதம் என்னும் நூலில், கர்ம காண்ட விஷயம், பக்தி காண்ட விஷயம், பக்தியில், பிரதீக பக்தி, அகங்கிரக பக்தி, ஞாந காண்ட விஷயம், ஞாநம் பேத ஞாநம், அபேத ஞாநம், இரு வகைத்து என்றும், பேத ஞாநம் லோகாந்தரங்களை அடையல் ஆம். புநர் அபி புநர் அபி (மீண்டும் மீண்டும்) மேல் கீழ் ஜநநங்களை அடையல் ஆம் என்றும், அபேத ஞாநமே, தேகத் திரய நிவிர்த்தியினை உண்டாக்கும். அநதி கிருத புருஷனுக்கு ஒரே ஜநநத்தில் மோக்ஷம் உண்டாகும் என்றும், அதி கிருத புருஷருக்கு பல ஜந்மம் வரினும், ஒருவனுக்கு, "இளமை முதற் பேதம் பிறந்திடினும், அவனுக்கு, ஓர் உடம்பே ஆய நின்ற பெற்றி போல்." என்று வேதாந்த சூடாமணி,

161 "அறைந்த நூகர் வினையதுதான் லோக யாத்திரைகன்
அநதிகரித் துறுநரற்கே ஒருடம்பு தன்னில்,
செறிந்துநுகர் வாமவற்றின் அதிகிருதர் ஆகிச்
சிறமா புருடற்குத் தசசங்கை உடம்பில்'
உறைந்தலது தீர்ந்திடா தெனினுமறைப் பின்றி
உறுதலால் ஒருவனுக்கிங் கிளமைமுதல் பேதம்,
பிறந்திடினும் அவனுக்கோர் உடம்பே ஆயநின்ற
பெற்றிபோல் ஆகும்என உணர்ந்திடு தெரிந்தே."

கூறுவதனுல், அவனுக்கு, ஓர் உடம்பாகவே இருந்து தேகத் திரய நிவிர்த்தி ஆகிய மோக்ஷம் அடைகின்றனர்.

அப்படிக் கன்றி, இந்தத் தூல சரீரம் நீங்கி கைலாசம் வைகுண்டம், மகா கைலாசம் அப்ராகிருத வைகுண்டம்

போய் சிவ விஷ்ணு திரு அடியில் இருப்பதற் குரிய ஸ்வர்ணமய சரீரத்தினைப் பெறினும், சிவ விஷ்ணு வாதியர் வேறு உலகம் சென்ருலும், நாம் இருப்பதற் கில்லை. நாம் அபராதம் செய்யின், அவர்கள் சாபம் போடுவர். ஆனதால், காரண சரீரம் ஞானத்தினுலும், சூக்ஷும சரீரம், உலை இரும்பு உண்ட நீர் போல், மாயை அவித்தையில் லயம் அடையும். தூல சரீரம் பிராரப்த கர்ம க்ஷயத்தினுலும் அழிந்து போயின், பிரதிவிம்பம் இன்மையின், ஜன்ம எடுத்தற்கு ஏதுவில்லை என்றும்,

“அரியமெய் ஞானத் தீயால்
அவித்தைஆம் உடல்நீ ருகும்,
பெரியதூ லமும்கா லத்தால்
பிணம்ஆகி விழும்அந் நேரம்,
உரியசூக் குமச ரீரம்
உலையிரும் புண்ட நீர்போல்,
தூரியம்ஆய் விபுஆய் நின்ற
சொருபத்தில் இறந்து போமே. 98

(தத்துவ விளக்கப் படலம்)

என்று இதே நூல் கூறுகிறபடியால் உணர்க.

“முத்தியிலும் மும்முதலும் உண்டு என்று உரைத்தல் எவன் பித்தம் உறும் சைவா நீ பேசு.” என்று சைவ சித்தாந்தப் பெரியார் கூறியிருப்பதனையும் கூர்ந்து நோக்குக.

ஆராய்ச்சி முற்றும்

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிகள்
திரு அடிகளே சரணம்.

KOTHOUR ANJANEYA LIBRARY, KOVILOOR
A. No. 12174